2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம்: 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 13 மதுரை 29-10-75 புதன் மலர் 226

## பொருளாதார குற்றவாளிகள் விடுதலை செய்யப்படுவார்களாம்

ஜபல்பூர், அக். 25—

பொருளாதாரக் குற்றங்கள் புரிந்ததற்காக 'மிசா' சட்டத்தின்கீழ் கைதுசெய்யப்பட்டவர்களை விடுதலைசெய்வது பற்றி பரிசீலிக்கப்படும் என்று மத்தியபிரதேச முதலமைச்சர் சேத்தி கூறினர். பாசிஸ எதிர்ப்பு என்ற பெயரில் நடத்தப்பட்ட கூட்டமொன்றில் பேசுகையில் மேற்கண்டவாறு கூறினர். ஆனல், தடைசெய்யப்பட்ட ஸ்தாபனங்களைச் சேர்ந்தோரை விடுதலை செய்வது என்ற பிரச்னையே எழவில்லை என்றும் அவர் தெரிவித்தார்.

## ஆரம்ப பள்ளி பியூன் வேலைக்கு பட்டதாரிகள் போட்டாபோட்டி

பூனு, அக். 24—

ஆரம்ப பள்ளிக்கூடம் பியூன்வேலைக்கு பட்டதாரிகள் உட்பட ஆயிரக்கணக்கானேர் மனுச் செய்துள்ளனர், மகாராஷ்டிர மாநிலத்தில் உள்ள பூனு கார்பரேஷன் நடத்தும் ஆரம்பப்பள்ளிகளுக்கு 40 பியூன்கள் தேவை என அறிவிக்கப்பட்டது. அவ்வேலைக்கு பட்டதாரிகள் 15 பேரும் தேர்ச்சிபெருத பட்டதாரிகள் 200-க்கு மேலானேரும மெட்ரிகுலேஷன் படித்தவர்கள் 1500 பேரும் உட்பட 7000 பேர் மனுப்போட்டுள்ளனர்.

## போனஸ் குறைப்பு அவசரச் சட்டத்தை வாபஸ் பெறுக

### 40 ஆயிரம் பீடித் தொழிலாளர் 3ஆயிரம் முந்திரித் தொழிலாளர் வேலை நிறுத்தம்

போனஸ் குறைப்பு அவசரச் சட்டத்துக்கு, 9சங்கங்கள் கூட்டாக விடுத்த அறைகூவலுக்கிணங்க தமிழகம் முழுவதும் இலட்சக்கணக்கான தொழிலாளர்கள் கடந்த 24ந் தேதி ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்து தமது ஆட்சேபத்தைத் தெரிவித்தனர்.

**வடாற்காடு மாவட்டத்தில்**

குறைந்த பட்சபோனஸ் 8.33 சதவீதம் என்பதை 4சதவீதமாகக் குறைத்து பிறப்பிக்கப்பட்ட அவசரச் சட்டத்தை வாபஸ் பெறக்கோரி வடாற்காடு மாவட்டத்தில் 40 ஆயிரத்துக்கு மேற்பட்ட பீடித்தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர்.

வேலூர், விருதம்பட்டு ஆகிய இடங்களில உள்ள பிரதான டிரேட் மார்க் பீடித் தொழிற்சாலைகளும் கிளை நிறுவனங்களும் மூடப்பட்டிருந்தன.

வேலை நிறுத்தத்தையொட்டி, அன்றுமாலை டவுனிலில் நடந்த பொதுக்கூட்டத்துக்கு தோழர் வே. கண்ணன் தலைமை வகித்தார். போனஸ் அவசரச் சட்டத்தினுல் தொழிலாளர்களுக்கு ஏற்பட்டுள்ள பாதகங்களை விளக்கி தோழர்கள் கே ஆர் சுந்தரம், எஸ் ஆறுமுகம் ஆகியோர் பேசினர்.

போனஸ் அவசரச் சட்டத்தை வாபஸ் பெறக்கோரியும், தமிழக அரசு கெஜட் அறிவிப்புப்படி குறைந்தபட்சக் கூலியை அமுல்படுத்தக் கோரியும் வாரத்தில் 6 நாட்கள் வேலை தரக்கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

**மூவாயிரம் முந்திரித்தொழிலாளர்**

குமரி மாவட்டத்தில் முந்திரித் தொழிலில் ஈடுபட்டுள்ள 3 ஆயிரம் தொழிலாளர்களும் இந்த வேலைநிறுத்தத்தில் முழுமையாக பங்கு கொண்டனர்.

**ஆரல்வாய்மொழி**

இங்குள்ள கூட்டுறவு நூற்பு ஆலையில் 450க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் அடையாள வேலைநிறுத்தத்தில் பங்கு கொண்டனர்.

வேலைநிறுத்தத்தில் சேர வேண்டாம் என்று திமுக சங்கத்தினர் கேட்டுக் கொண்டதற்கு இணங்க— முதல் ஷிப்டில் 8 பேரும், 2-வது ஷிப்டில் 4 பேரும், 3-வது ஷிப்டில் 8 பேரும் மட்டுமே வேலை செய்தனர். இவர்களுக்காக— 50 ராட்டுகள் ஓட வேண்டிய ஆலையில் 5ராட்டுகள் மட்டுமே ஓடின. ஆனலும் 50 ராட்டுகளுக்கான மின்சார மோட்டாரை ஓட்டியும், வேலை செய்த 20 தொழிலாளர்களுக்காக ஜீப் முதலியன கொடுத்து உதவியும் நிர்வாகம் பெருமளவில் செலவு செய்ததாம்.

**நெல்லைமாவட்டம்**

நெல்லை மாவட்டம் கோவில்பட்டியில் உள்ள லெட்சுமி மில்லில் எல்லாத் தொழிலாளர்களும் வேலை நிறுத்தத்தில் கலந்துகொண்டனர்.

வேலைநிறுத்தத்தில் கலந்து கொள்ளவேண்டாம் என்று ஏ ஐ டி யூ சி தலைமைகேட்டுக்கொண்டபோதிலும், அச்சங்கத்தின் தொழிலாளர்களும் இந்த வேலைநிறுத்தத்தில் முழுமையாகப் பங்கு கொண்டனர்.

இதே போன்றுஇங்குள்ள அச்சுத் தொழிலாளர்கள் அனைவரும் வேலைநிறுத்தம் செய்தனர்.

வீரவநல்லூரில் உள்ள கோமதி மில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் கலந்துகொண்டு போனஸ் அவசரச் சட்டத்தை வாபஸ் பெறும்படி வற்புறுத்தினர்.

**சேலம் மாவட்டம்**

சேலம் மாவட்டத்தில் சாயத் தொழிலாளர்கள் 500பேரும், மாக்னசைட் தொழிலாளர்களும் பஞ்சாலைகளிலும் பணிபுரியும் எல்லாத் தொழிலாளர்களும் வேலைநிறுத்தத்தில் பங்கு கொண்டு போனஸ் அவசரச் சட்டத்துக்கு எதிர்ப்பு தெரிவித்தனர்.

பள்ளிப்பாளையம் சேஷசாயி பேப்பர் மில் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்தனர்.

**தளவாய்புரம்**

இங்குள்ள அனைத்துத் தொழிலாளர்களும் சிஐடியூ, தேசிய தொழிலாளர் காங்கிரஸ், எச்எம்பி, முன்னேற்ற பேரவை ஆகிய சங்கங்கள் விடுத்த அறைகூவலுக்கு இணங்க வேலை நிறுத்தம் செய்தனர். ஏ ஐ டி யூ சி, அண்ணா பொதுத்தொழிலாளர் சங்கம் சார்பிலும்வேலை நிறுத்தம் செய்யும்படி தனியாக வேண்டுகோள் விடுத்திருந்தனர்.

அன்று காலையில்நடந்த அனைத்துத் தொழிலாளர் மகாசபைக் கூட்டத்துக்கு ஏ எஸ் பழனிச்சாமி [தேசிய தொழிலாளர் காங்கிரஸ்] தலைமை வகித்தார். தி நீர் காத்தலிங்கம் [சி ஐ டி யூ] கு சண்முகவேல் (எச் எம் பி பேசினர்.

**புதுக்கோட்டை மாவட்டம் காவேரி மில்**

காவேரி மில்லில் எல்லாத் தொழிலாளர்களும் வேலைநிறுத்தத்தில் பங்கு கொண்டனர். ஏஐடியூசி, அ தி மு க, இந்திரா காங்கிரஸ் ஆகிய தொழிற்சங்கங்கள் கடைசி நேரத்தில் வேலைநிறுத்தத்தில் பங்கு கொள்வதாக அறிவித்து, வேலைநிறுத்தம் செய்தனர்.

## தி.க.வில் பிளவு

திருச்சி, அக். 25—

திராவிடக்கழகத்தில் கடும் பிளவுஏற்பட்டுள்ளது திராவிடக்கழகத்தின் தலைவியான திருமதிமணியம்மை, பொதுச் செயலாளர் வீரமணி ஆகியோர்மீதுகுற்றம்சுமத்தி தங்கராஜ், கிருஷ்ண சாமி ஆகியோர் ஒரு புதிய கட்சியை உருவாக்கியுள்ளனர்.

அதற்கான கூட்டம் திருச்சியில் நடைபெற்றது, அக்கூட்டத்தில் 1800 க்கும் அதிகமான பிரதிநிதிகள் கலந்துகொண்டனர். இப்புதிய கட்சிக்குகிருஷ்ண சாமி தலைவராகவும் தங்கராசு பொதுச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.

தி க வின் தலைவிப்பொறுப்பிலிருந்தும், பொதுச் செயலாளர் பொறுப்பிலிருந்தும் முறையே மணியம்மை — வீரமணியையும் விலக்கித்தீர்மானம் நிறைவேற்றியுள்ளனர்.

மணியம்மை சர்வாதிகாரியாக நடந்துகொள்கிருர் என்றும் வீரமணி கட்சி விரோத நடவடிக்கைகளில் செயல்படுவதாகவும் கூறியுள்ளனர். பெரியாரின் கொள்கையிலிருந்து மணியம்மை விலகிச்செல்வதாகவும் கூறியுள்ளனர்.

மேலும், தி க வின் சொத்துக்கள், அது பற்றிய தஸ்தாவேஜுகள் ஆகியவைகளை இன்னும் ஒருமாதத்திற்குள் கிருஷ்ண சாமி, தங்கராஜ் ஆகியோரிடம் ஒப்படைக்குமாறு மணியம்மையையும் வீரமணியையும் வற்புறுத்தியுள்ளனர்.

தி மு க வைப்பொறுத்தவரையில் அக்கட்சி பற்றி பெரியார் என்ன நிலை கொண்டிருந்தாரோ அதே நிலைதான் எங்களுடையநிலையும்என்றும் கூறியுள்ளனர்.

## பொன்மலை ராமு காலமானர்

திருச்சி, பொன்மலை தோழர் ராமு என்ற எம். ராமச்சந்திரன் அவர்கள் கடந்த 22—10—75 ஆம் நாள் பொன்மலையில் உள்ள தமது இல்லத்தில் காலமானுர் என்பதை ஆழ்ந்த வருத்தத்துடன் தெரிவிக்கிருேம்.

திடீர் மாரடைப்பு காரணமாக மரணமடைந்த தோழர் ராமு, கடந்த 30 ஆண்டு காலமாக பொன்மலை இரயில்வே தொழிற் சங்கத்துடன் இரண்டறக் கலந்துசெயலாற்றிவந்தவர். தம்மை இரயில்வே நிர்வாகம் வேலையிலிருந்து நீக்கி பழி வாங்கிய போதிலும் மனம தளராது, உறுதி குன்ருது கொண்ட இலட்சியத்துக்காக தொடர்ந்து தொழிற் சங்க இயக்கத்துக்கு தன்னை அர்ப்பணித்துக் கொண்ட தோழர் ராமு, தொழிற்சங்க இயக்கம் சம்பந்தமாக ஆட்சியாளரால் சிறைப்பிடிக்கப் பட்டுள்ளார். தோழர் ராமுவின் மறைவு இரயில்வே தொழிற்சங்க இயக்கத்துக்கு பேரிழப்பாகும்.

மறுநாள் [23ந் தேதியன்று) பொன்மலை தட்சிண இரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன் [டி ஆர் இ யூ] அலுவலகத்திலிருந்து புறபபட்ட இறுதி ஊர்வலத்தில்ஏராளமான தொழிலாளர்கள்கலந்து கொண்டு அஞ்சலிசெலுததினர். இறுதியில இரயில்வே தொழிலாளர் தலைவர் கே. அனந்தநம்பியாரும் மற்றும் பலரும் அஞ்சலி செலுத்திப்பேசினர்.

### மார்க்சிஸ்ட் கட்சி, தீக்கதிர் அஞ்சலி

தோழர் ராமுவின் மறைவுக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ மாநில செயற்குழுவும், 'தீக்கதிர்' நாளிதழும் தமது அஞ்சலியையும் அனுதாபத்தையும் தெரிவித்துக்கொள்கின்றன.

## மாதர் கையெழுத்து இயக்கம் மதுரையில் தீவிரம்

மதுரை, அக். 27—

தமிழக ஜனநாயக மாதர் சங்கத்தின் அறைகூவலுக்கு இணங்க மாநிலம் முழுவதும் ஒரு லட்சம்மாதர்களிடம் கையெழுத்து வாங்கும் இயக்கம் தமிழகம் முழுவதும் இம்மாதம் 24-ந் தேதி முதல் துவங்கி 31 ந் தேதி முடிய நடக்கிறது.

"சமவேலைக்கு சமஊதியம்" சட்டம் கருராக அமுலாக்குதல், குறைந்த விலையில் போதிய அளவு அரிசியும், ஏனைய அத்தியாவசிய பொருட்களும் வழங்குதல், அவசர நிலைப்பிரகடனத்தை வாபஸ் பெறுதல் ஆகிய கோரிக்கைகளை நிறைவேற்றும்படி மாநில முதலமைச்சரையும், பாரதப் பிரதமரையும் வேண்டிக் கொள்ளும் மகஜர்களில் கையெழுத்துக்கள் திரட்டப்பட்டு வருகின்றன.

மதுரை மாநகரில்மாதர் சங்கத் தலைவர்களும் ஊழியர்களும் கையெழுத்து இயக்கத்தில் தீவிரமாகஇறங்கியுள்ளனர் இந்த இயக்கத்தின் முக்கியத்துவம் பற்றியும், கோரிக்கைகளை விளக்கியும் மதுரையில் மாதர் சங்கஊழியர்பேரவைக் கூட்டங்கள் நடந்தன.

பூந்தோட்டத்தில் 25-ந் தேதியன்று நடந்த கூட்டத்துக்கு தோழர் ஆர் சீதாலெட்சுமியம்மாள் தலைமை வகித்தார். தோழர்கள் கே பி ஜானகியம்மாள் திருச்சி ஜானகி ராமச்சந்திரன் ஆகியோர் பேசினர்.

ஆழ்வார்புரம் மண்டபத்தில் 26 ந் தேதி நடந்த ஊழியர் பேரவைக்கூட்டத்துக்கு தோழர் அம்மாக்கண்ணு அம்மாள் தலைமைவகித்தார் தோழர்கள் கே பி ஜானகியம்மாள், பாப்பா உமாநாத் ஆகியோர் பேசினர்

## ஸ்தாபன காங்கிரஸ் கட்சிக்கும் 'நவசக்தி'க்கும் சம்பந்தமில்லை

### பி. ராமச்சந்திரன் அறிக்கை

சென்னை, அக். 27—

ஸ்தாபனக் காங்கிரஸ் கட்சி இந்திரா காங்கிரஸ் கட்சியோடு இணைந்து விட வேண்டும் என்று பிரச்சாரம் செய்து வரும 'நவசக்தி' பத்திரிக்கைக்கும், ஸ்தாபன காங்கிரஸ் கட்சிக்கும் சம்பந்தமில்லை என்று தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் கட்சித்தலைவர் திரு பி ராமச்சந்திரன் அறிவித்துள்ளார்.

அவர் வெளியிட்டுள்ள ஓர் அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

அண்மைக் காலமாக 'நவசக்தி'யின் போக்கு வருந்தத்தக்கதாக உள்ளதென்று நாள்தோறும் பல கடிதங்கள் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்குவந்து கொண்டிருகின்றன. நேரிலும் பல அன்பர்கள் வேதனையோடு இது பற்றி விளக்கம் கேட்கிருர்கள்.

கடிதங்கள் எழுதியுள்ள சிலருக்கு விளக்கம் அளித்துப்பதில் எழுதியுள்ளேன். ஆனல் பெருகிவரும் கடிதங்களுக்குத் தனித்தனியாகப் பதில் எழுத முடியாமையால் பத்திரிக்கை வாயிலாக பதிலளிக்க விரும்புகிறேன்.

'நவசக்தி' பத்திரிக்கை தமிழ்நாடு ஸ்தா.காங். கருத்தைப் பிரதிபலிக்கும் பத்திரிகையென யாரும் கருத வேண்டியதில்லை. அதற்கும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்கும் சம்பந்தமில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அந்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## வறுமையால் வரலாறு காணுத கொடுமை

## இலவச சேலை வாங்கச் சென்ற 19 பெண்கள் இன்னுயிரை இழந்த கோரம்

### மதுரையில் உள்ளமுருக்கும் நிகழ்ச்சி

**மதுரை, அக். 27—**

**இலவசமாக வழங்கப்பட்ட சேலை வாங்கச் சென்ற பெண்களில் பத்தொன்பது பேர் தமது இன்னுயிரையே இழந்தனர்.**

அதிர்ச்சி தரக்கூடிய— நாட்டின் வறுமையைப்படம் பிடிததுக் காட்டக்கூடிய— இன்றைய ஆட்சியாளர்களால்வறுமைப்படுகுழியில் தள்ளப்பட்ட ஏழை மக்களின் அவலநிலையைஉணர்த்தக்கூடிய — நேரில் பார்ப்போரின் உள்ளத்தை உருக்கக் கூடிய இந்தத் துயர மிகு சம்பவம் மதுரை மாநகரில் கடந்த 26-ந் தேதிஞாயிற்றுக் கிழமை நிகழ்ந்துள்ளது.

இலவச சேலை வாங்குவதற்காககூடிய ஆயிரக்கணக்கான பெண்கள் கூட்டத்தில், இருந்த ஒரே சேலையும் சின்னபின்னப் பட்டு பரிதாபமாகத் திரும்பிய பெண்களும் ஏராளம்.

இது பற்றிய விவரம் வருமாறு:—

மதுரை சீதாலெட்சுமி மில் நிர்வாகியான ராமாச்சாரிஎன்பவர், சீதாலெட்சுமி மில் அறக்கட்டளை மூலம் தனது சமூகமான சௌராஷ்ட்ராவைச் சேர்ந்த பெண்களுக்கு, தீபாவளி பண்டிகையை முன்னிட்டு இலவசமாக புடவைவழங்குவதுவழக்கமாம்.

அதன்படி இந்த ஆண்டும் புடவை வாங்குவதற்கான அடையாளச் சீட்டுகளை ஞாயிற்றுக்கிழமை காலையில் சௌராஷ்ட்ரா உயர்நிலைப் பள்ளியில் பெற்றுக் கொள்ளலாம் என்று அறிவிப்புக் கொடுக்கப்பட்டதாம்.

**கண்டோர் அனைவரையும் கண்ணீர்மல்க செய்தகாட்சி**

நாட்டிலுள்ள பொருளாதார நெருக்கடி, அதைத் தொடர்ந்து வேலையிழப்பு, விலைவாசி உயர்வு, வறுமை ஆகியவற்றில் உழலும் சௌராஷ்ட்ரா குடும்பங்களைச் சார்ந்த ஆயிரக்கணக்கான, தாய்மார்களும், சகோதரிகளும்—ஏராளமானேர் குழந்தைகளுடனும்—அப்பள்ளிககு முன், முதல்நாள் இரவிலிருந்தே குவியத் தொடங்கினர். காலை 6 மணியளவில் பார்த்தால் ஏகக் கூட்டம்— கட்டுப்படுத்த முடியாத கூட்டம். "சீட்டு வாங்காவிட்டால் புடவைகிடைக்காதே" என்றஒரே எண்ணத்துடன் 10 மணியளவில் பள்ளியின் கேட்டைத் திறந்து நீ முந்தி, நான் முந்தி என்று முண்டியடித்துக் கொண்டு உள்ளே பாய்ந்தனர். அந்தோ பரிதாபம், பலவீனமான ஏராளமான தாய்மார்களும் குழந்தைகளும் கூட்ட நெரிசலில் சிக்கி மூச்சுத் திணறி மயக்கமுற்று கீழே விழுந்து—மிதிபட்டு அதே இடத்தில் 17 பெண்களும 12 வயது பையனும் 3 வயது குழந்தையும் ஸ்தலததிலேயே பிணமாயினர். மிகவும் ஆபத்தானநிலையிலிருந்த 7 பேர் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டபின், அவர்களில் ஒரு மூதாட்டியும் பிணமானுர்.

உயிரிழந்தவர்களை வரிசையாக அடுககிவைத்திருந்த காட்சி, கண்டோர் அனைவரையும் கண்ணீர் மல்கச் செய்தது.

**அதிர்ச்சி**

இந்தச்செய்தி காட்டுத்தீ போல் மாநகர் முழுதும் பரவியது. பல்லாயிரக்கணக்கான மக்கள் இந்தக் கோர நிகழ்ச்சியைக் காண குழுமிவிட்டனர். இதனல் அப்பகுதியில் போக்குவரத்தே ஸ்தம்பித்து விட்டது.

ஓசிப்புட் வைக்காக உயிரை இழந்த இந்த நெஞ்சுருக்கும் செய்தி காலை 11 மணியளவில் மாநகர மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அலுவலகத்துக்கு எட்டியதும், அங்கிருந்தஅனைவரும் அதிர்ச்சியடைந்தனர். உடனே தமிழக ஜனநாயக மாதர் சங்கத்தலைவரும், அத்தொகுதி முன்னுள் சட்டமன்ற உறுப்பினருமான தோழர் கே பி ஜானகியம்மாள், கட்சியின் மதுரைக் கமிட்டி உறுப்பினர்கள் கே. சுப்பையா, கே எம் கணபதி ஆகியோர் ஸ்தலத்துக்கு விரைந்தனர்.

கட்டுக்கடங்காத கூட்டம் முண்டியடித்துக் கொண்டிருந்தபோது ஒழுங்குபடுத்த ஸ்தலத்துக்குவராத போலீஸ் படை இந்தக் கோரச் சம்பவம் நிகழ்ந்தபின், ஸ்தலத்துக்கு விரைந்து வந்து ஒழுங்குபடுத்தும் பணியில் ஈடுபட்டது.

மாவட்ட வருவாய்த் துறை அதிகாரி திருமதி இலட்சுமி பிராணேஷ், ஆர் டி ஓ தங்கவேலு, போலீஸ் டி ஐ ஜி கிருஷ்ணசாமி, சூப்ரிண்டெண்ட் ராஜசேகரன் நாயர், டிப்டி சூபரிண்டெண்ட் சீனிவாசன, கனகராஜ் மற்றும் பல அதிகாரிகள் விரைந்து வந்து சேர்ந்தனர்.

### மாண்டோர் குடும்பம் ஒவ்வொன்றுக்கும் ரூ 5000 உதவி தருக

### கே. பி. ஜானகியம்மாள் கோரிக்கை

இத்துயர நிகழ்ச்சியை நேரில் பார்த்து விட்டுவந்த தோழர் கே பி ஜானகியம்மாள் விடுத்துள்ள அறிக்கை வருமாறு;—

காலை 11 மணியளவில் இச்செய்தி அறிந்தவுடன் ஸ்தலத்துக்கு விரைந்து சென்ற என்னையும் தோழர்கள்சுப்பையா கே எம் கணபதி ஆகியோரையும், மாண்டவர்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்த காட்சி அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

மதுரைநகரில் இலட்சக்கணக்கான மக்கள் கூடும் திருவிழாக்களும் இதர நிகழ்ச்சிகளும் எத்தனையோ நடந்துள்ளன. ஆனல் இம்மாதிரி கோரச் சமபவத்தைப் போல நான் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை.

ஏழைகளுக்கு தர்மம் செய்து புண்ணியம் தேடிக் கொள்ள நினைத்த, மில் நிர்வாகிக்கு இச்சம்பவத்தால் 19 பேர் உயிர்களை பலி கொண்டவர் என்ற பழிச் சொல்லையும் சுமக்கும் நிலை இன்று ஏற்பட்டுள்ளது.

சாதாரணமாக ரேஷன் கடையில் இன்று நல்ல அரிசி போடுகிருர்கள் என்ருலே, கார்டும், பையுமாக கடைக்குமுன் ஆயிரம் பேர்களுக்குமேல் கூடிவிடும் இக்காலத்தில், இலவசமாகபுடவை கிடைப்பதென்ருல் கூட்டம் எப்படியிருக்கும் என்பதை உணர்ந்திருக்க வேண்டும். முன்னதாக காவல்துறை மேலதிகாரிகளுடன் கலந்து ஒழுங்கு முறைபடுத்தும் ஏற்பாடுகளை செய்திருந்தால் இந்தக் கொடுமை நேரிடாமல் தவிர்த்திருக்க முடியும்.

'ஏழைகளின் பொக்கிஷம் செல்வந்தர்கள்தான்' என்ற அவர்களது கருணையால்— தர்மத்தால் —ஈகையால்- மக்களது வறுமையை போக்கிவிடலாம் என்ற தத்துவமும், சமூக அமைப்பும் மாருதவரை இம்மாதிரிக் கொடுமைகள் நாட்டில் நடப்பதில் வியப்பில்லை.

ஆனலும், தமிழக அரசும், மாவட்ட ஆட்சித்தலைவரும் முன்நின்று மாண்டவர் குடும்பம் ஒவ்வொன்றுக்கும் சீதாலெட்சுமி மில் அறக்கட்டளை ரூ. 5000 வீதம் உதவி நிதி வழங்க நடவடிக்கை எடுததுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிருேம்.

### முதலமைச்சர் நிதியிலிருந்து நிவாரண நிதி

மதுரை சீதா லட்சுமி மில்லின் அறக்கட்டளை சார்பாக சேலைகள் வழங்கிய போது ஏற்பட்ட நெரிசலில் மரணமடைந்தவர்கள் 20 பேருக்கும்தலா ரூ 2000 வீதம் தமிழ்நாடு முதல் அமைச்சர் நிதியிலிருந்து வழங்குவதற்கு உத்தரவிட்டுள்ளார் முதல் அமைச்சர் கருணநிதி. இம்மரணங்கள் எவ்வாறு நிகழ்ந்துள்ளன என்பதை விசாரித்து அதிகாரிகள் அறிக்கை தருவார்கள் என முதல் அமைச்சர் கருணநிதி கூறினர். மே[illegible]ம் பொறுமைஉணர்வு இல்[illegible] காரணத்தால் இபபடிப் தவிர்க்க முடியாத சம[illegible] கள் நிகழ்கின்றனவாம்

## ஐஸ்லாந்தில் பெண்கள் ஒரு நாள் ஸ்டிரைக்

### அன்ருட வாழ்க்கை ஸ்தம்பிப்பு

ரெய்க்ஜேவிக், அக். 25—

நாட்டின்பொருளாதார வளர்ச்சியிலும் சமூகவாழ்க்கையிலும் பெண்கள்பெரும் பங்குகொண்டுள்ளார்கள் என்பதை நிரூபிக்கும் வகையில் ஐஸ்லாந்தில் பெண்கள் ஒருநாள் வேலை நிறுத்தம் செய்தனர். அன்ருட வாழ்க்கையை ஸ்தம்பிக்கச் செய்தனர்.

இவ் வேலை நிறுத்தத்தில் அனைத்துத் துறைகளிலும் வேலை பார்க்கும்பெண்களும் ஒன்றிணைந்தனர்.

தொழிற் சாலைகளிலும், அலுவலகங்களிலும் கடைகளிலும் வேலைசெயயும்பெண்கள் வேலைக்குச் செல்லவில்லை.

செய்தித் துறைகளில் வேலை செய்யும் பெண்கள் வேலைநிறுத்தம் செய்ததால் டெலிபோன் போன்ற செய்தித்தொடர்பு வேலைகள் ஸ்தமபித்துவிட்டன.

பத்திரிக்கைகள் வெளியாகவில்லை., விமானம் ஊழியப்பெண்கள் வேலை நிறுத்தம செய்ததால் விமானப் போக்குவரத்துகளெல்லாம் ரத்து செய்யபபட்டன.

பேங்குகள் திறக்கப்பட்டிருந்தாலும்பெரும்பகுதியான வேலைகள் செயல்படவில்லை தொழிற்சாலைகளில் பெரும் பகுதியான இயந்திரங்கள் தூங்கின.

ஹோட்டல்களுக்கு வரும் வாடிககைக் காரர்களுககு ஹோட்டல அதிபர்களே பரிமாற வேண்டிய நிலை ஏற்பட்டது. நெருக்கடியும் பண்டங்களின் சேதமும் ஏராளமாக ஏற்பட்டது.

நர்சரி பள்ளிகளில் வேலை செய்யும் ஆசிரியைகளும் வேலைநிறுத்தம் செய்தனர். பல ஆண்கள் தங்கள் குழந்தைகளைத் தங்கள் அலுவலகத்திற்கே கொண்டு செல்ல நேர்ந்தது.

மேலும் ரெய்க்ஜேவிக் நகரில் 25 ஆயிரம் பெண்கள் கலந்து கொண்ட பிரம்மாண்டமான ஊர்வலம் நடைபெற்றது. அதனல் நகரின் மத்திய பகுதிகளில் போக்குவரத்து ஸ்தம்பித்து விட்டது. கார்கள் எல்லாம் ஆங்காங்கே பல மணி நேரம் நின்றுவிட்டன.

அலுவலகங்களிலும் தொழிற்சாலைகளிலும்ஏனைய பிரிவுகளிலும் வேலைசெய்யும் பெண்களின் ஒருநாள்வேலை நிறுத்த நடவடிக்கைக்கு ஆதரவளித்து குடும்பப் பெண்களும வேலைநிறுத்தம் செய்தனர். அதனல், தட்டுகளும பாத்திரங்களும் கழுவப்படவில்லை. வீடுகள் சுத்தம் செய்யப்படவில்லை.

நாட்டின் பொருளாதார வாழ்க்கைக்கும் சமூகவாழ்க்கைக்கும் பெண்களின் பங்கு மிக அத்தியாவசியமானது என்பதை வலியுறுத்தவே இவ்வேலை நிறுத்தத்தை நடத்தியதாக இவ்வேலை நிறுத்தத்துககு வேலைசெய்தவர்களில ஒருவரான திருமதி கெர்டர் ஸ்டின்தோர்ஸ்[illegible]டீர் என்பவர் கூறினர்.

# தீக்கதிர்

## யாருக்காக வாதாடுகிருர் சுப்ரமண்யம்?

"பண வீக்கத்தைத் தவிர்க்க முடியாது" என்று கூறிவிட்டார் நிதியமைச்சர் திரு சி சுப்ரமண்யம், அக்.26ல் புதுடெல்லியில் நிர்வாகப் பிரச்சினைகளைப் பற்றி நடந்த தொரு கருத்தரங்கில். சில வாரங்களுக்கு முன்புதான் பணவீக்கத்தை ஒழித்துக் கட்டி விட்டோம் என்று அவர் மார்தட்டிப் பேசியதை நேயர்கள் மறந்திருக்கமாட்டார்கள். 12சதவீதமிருந்த பணவீக்கத்தை 2 சதவிகிதத்திற்கு குறைத்துவிட்டோமென்று அன்று கூறினர். சிலநாட்களுக்குள் அடியோடு குறைந்துவிட்டது என்றும் அழுத்திச் சொன்ஞர். உலகநாடுகளிலெல்லாம்—வளர்ச்சியடைந்த நாடுகளில்கூட, இத்தாலி, மேற்கு ஜெர்மனி, அமெரிக்கா, பிரிட்டன் போன்றவற்றில்கூட, 10சதவிகிதத்திலிருந்து 15சதவிகிதம்வரை பணவீக்கம் இருக்கும்போது. பிலிப்பைன்ஸ், பிரேஜில் முதலிய நாடுகளில் அது 20முதல் 30சதவிகிதமாக இருக்கும்போது நமது மத்திய அரசின் நடவடிக்கைகளின் மூலம் இந்தியாவில் பணவீக்கத்தை வென்றுவிட்டோமெனறு அறிக்கை விடுத்தார். பாரதப் பிரதமரும் பணவீக்கம் தடுக்கப்பட்டு விட்டதென்ற பொருள் படும்படி பேசி வந்தார்.

இன்று அதற்கு நேர்மாருக சுப்ரமணியம் உண்மையை கூறவேண்டி வந்துள்ளது. இந்தியாவில் பணவீக்கமென்பது உலக நிலைமையின் ஒரு பகுதிதானே என்கிருர். அவர் குறிப்பிடுவது முதலாளித்துவ உலகம். முதலாளித்துவ நாடுகளின் தேர்ச்சக்கரத்தில் இந்தியப் பொருளாதாரத்தைக் கட்டிப்போட்டுள்ளதை இவ்வாருவது ஒப்புக்கொள்ளுகிருர். உலக ரீதியான பணவீக்கமில்லாதிருந்தால் சென்ற வருடம் நாம் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்த உணவு தானியங்கள், பெட்ரோல், மண்ணெண்ணை உரங்கள்'—இவற்றிற்கு நாம் செலவழித்த தொகையை விட 250 கோடி டாலர்கள் (அதாவது ரூ 2,000 கோடி) குறைவாக செலவழித்திருக்க முடியுமென்று ஏதோ புதிதாக கண்டுபிடித்த உண்மையைப் போல் இன்று வெளியிடுகிருர்.

பணவீக்கத்தைத் தடுக்க எடுத்த நடவடிக்கைகள் விலைவாசிக் குறைப்பைக் கொண்டு வருவதற்கு பதிலாக பொருள் தேகசத்திலும் உற்பத்தியான பொருட்கள் விற்கப்படாமல் ஸ்டாக்காக குவிந்துநிற்பதிலும் கொண்டு போய் விட்டது என்று கவலை தெரிவிக்கிருர். ஆனல் "வளரும் பொருளாதார"த்திலும், மாறிவரும் நிலைமையிலும் அது தவிர்க்கமுடியாததென்றும் கூறுகிருர். மத்திய சர்க்கார் பணவீக்கத்தைக் குறைக்க எடுத்த நடவடிக்கைகள்—நிதிக்கொள்கை, பணப்புழக்கக் கொள்கை, கண்ட்ரோல்கள், பொருள் விநியோகம என்று அவர் கூறி இவற்றை ஜாக்கிரதையாக கையாள வேண்டுமென்கிருர். சர்க்கார் கொள்கைகள் தோல்வியுற்றன என்று ஏற்றுக்கொள்ள அவர் தயாராக இல்லை. அதற்கு மாருக "பொருள் விநியோகம்" சம்பந்தமாக, ஏழை எளியவர்களைக் கருத்தில்கொண்டாலும் கொள்முதல், கண்ட்ரோல், விநியோகம் முதலியவற்றில் அரசினரின் கொள்கைகள் விவசாயத்துறையில் உற்பத்திக்கு ஊக்கமளிப்பதாக இருக்கவேண்டுமே தவிர அதை முடக்கிவிடக்கூடாது என்றும், கொள்முதல் என்பது உரம் வாங்கிப் போட்டதுடனும், விதைகள் வாங்கியதுடனும், போதிய கடன்வசதி அளிப்பதுடனும், இணைக்கப்பட வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிருர். யாருக்கு வக்காலத்து வாங்கிப் பேசுகிருர் அமைச்சர் என்று கூறத்தேவையில்லை.

இதாநாடுகளிடமிருந்து உதவி பெறுவதைப் பற்றி வெட்கப்படவேண்டியதில்லை என்றும் அறிவுரை வழங்கியிருக்கிருர். நம்மிடம் ரொக்கம் இல்லாதபோது இருப்பவர்களிடமிருந்து வாங்கிஞல் தவறில்லை என்கிருர். வளர்ச்சியடைந்த நாடுகளென்று இன்றுள்ளவை. காலனி ஆதிக்கச் சுரண்டல்முறை மூலம் காலனிகளிலிருந்து செல்வத்தை அவர்கள் நாட்டுக்கு மாற்றிக்கொள்ளவில்லையா என்றுகேட்கிருர். இன்று அமெரிக்கா போன்ற ஏகாதிபத்திய நாடுகள் இங்கு வட்டிக்குக்கடன் கொடுப்பதையும் மூலதனத்தைக் கொண்டுவந்து லாபம்திரட்டுவதையும் இவற்றின் மூலம் நமது அரசியல், சுதந்திரம் ஆகியவைகளை பாதிப்பதையும் அவர்களது புதிய காலனி ஆதிக்க முயற்சிகளாக அவர் கருதவில்லை. ஏதோ இங்கிருந்து முன்பு பணம் போனதுமாதிரி அங்கிருந்து நமக்கு இனமாக மாற்றப்பட்டுவருவதுபோல் வர்ணிக்கிருர். அன்னிய மூலதனத்துக்கு இன்னும் இதைவிட அப்பட்டமாக வாதாடத் தேவையில்லை.

மக்களின் வாங்கும் சக்தி குறைந்துள்ளது, விலைவாசி குறைப்புக்கு உத்தரவாதம் ஏற்படவில்லை, அரசினர் கொள்கைகளை மறு பரிசீலனை செய்து மாற்றிக்கொள்ள வேண்டும் என்ற எண்ணமே மத்திய அரசுக்குத் தோன்றவில்லை என்றே நிதி அமைச்சர் பேச்சு நமக்கு அறிவுறுத்துகிறது. இன்று அனுசரிக்கப்பட்டுவரும்கொள்கைகள் இன்னும் என்னென்ன துன்பதுயரங்களுக்கு நாட்டை அழைத்துச்செல்லுமோ ஒன்றும் கூறுவதற்குஇல்லை.

## முதலாளிகளுக்கு மனு போடுகிறது மேற்கு வங்க அரசாங்கம்

கல்கத்தா, அக். 25-

தொழில் தகராறுகளை அரசாங்கத்திற்கு தெரிவிக்காமல் தொழிலாளர்களை வேலைநீக்கமோ, கதவடைப்போ, லே-ஆப்போ, செய்யவேண்டாம். அப்பிரச்சினைகளைபரிசீலிக்க அரசாங்கத்திற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள் என்று மேற்கு வங்க அரசாங்கம், வர்த்தகர்கள், முதலாளிகள் சம்மேளனத்திடம் கேட்டுள்ளது.

முழுஅளவு தொழிலாளர்களையும பயனபடுத்துவதில் ஏதேனும் சிரமம் இருக்குமானல் அதனை முன்னதாக அரசாங்கத்திடம தெரிவிக்குமாறும் மேற்கு வங்க அரசாங்கம் அம்மாநில முதலாளிகளைக்கேட்டுக்கொண்டுள்ளது.

### திருத்தம்

தீக்கதிர் 28—10—75 வார இதழின் முதல் பக்கத்திலுள்ள கடிதத்தில் "நவசக்தி"யார் செய்யும் வேலை என்ன? என்றஉபதலைப்பின் கீழ், "யார்யாரெல்லாம்கட்சியைக் கண்டித்துவிட்டு" என்றிருப்பதை, "யார்யாரெல்லாம் கட்சியைக் கலைத்துவிட்டு', எனவும்,

"உங்களைப் பற்றி எங்களது நிலை" என்ற உபதலைப்பின கீழ், "உள்நாட்டு முதலாளிகளுக்கும்" என்றிருப்பதை, "உள்நாட்டு, வெளிநாட்டு முதலாளிகளுக்கும்" எனவும் திருத்தி வாசிக்க வேண்டுகிரேம்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ் ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.

---

நீலகிரி சின்கோனுத் தோட்டத்தில்

## பெண் தொழிலாளர் வீரப் போராட்டம்

### இழிவாகப் பேசிய அதிகாரி மன்னிப்பு கோரினர்

ஊட்டி. அக், 24—

இங்கு அரசுக்குச் சொந்தமான சின்கோனு (நடுவட்டம்) எஸ்டேட்டில் பெண் தொழிலாளர்கள் ஒன்றுபட்டுப் போராடி தங்களை இழிவாகப் பேசிய அதிகாரியை மன்னிப்புக் கேட்க வைத்தனர். இந்த நிகழ்ச்சி கடந்த 14-ந் தேதி நடந்தது.

ஓவர்சீயராக வேலை பார்க்கும் ஓர் அதிகாரி, பெண்களைப் பார்த்து இழிவான வார்த்தைகளால் ஏசினராம். இதஞல் கோபமும் ஆவேசமும் கொண்ட பெண் தொழிலாளர்கள் அனைவரும் அந்த அதிகாரியைச் சூழ்ந்துகொண்டு கண்டன முழக்கம் எழுப்பி ஆர்ப்பாட்டம் செய்தனர்.

"கூலி உயர்வு கொடுப்பதற்கு வக்கில்லாத நிர்வாகத்திற்கு, எங்களைத் திட்டுவதற்கு மட்டும் உரிமை யார் கொடுத்தது?" என்று ஆவேசக்குரலில் கேட்டு ஒருவர் கூட வேலைக்குச் செல்லவில்லை. கீழ்த்தரமான பாஷையில் திட்டிய அதிகாரி மன்னிப்புக் கேட்கும் வரை வேலைக்குச் செல்வதில்லை என்று சபதம் எடுத்தனர். இவர்களுக்கு ஆதரவாக ஆண் தொழிலாளர்கள் அனைவரும் நீலகிரி எஸ்டேட் ஒர்க்கர்ஸ் யூனியன் (சி ஐ டி யூ) தலைமையில் ஒன்று திரண்டு வேலை நிறுத்தத்தில் பங்கெடுத்தனர். நிர்வாகம் பழிவாங்கும் எண்ணத்துடன் சங்கத்தின் முக்கிய ஊழியர் நால்வரை தற்காலிக வேலை நீக்கம் செய்தது.

அதிகாரியின் அகம்பாவப் பேச்சையும், நிர்வாகத்தின் பழிவாங்கும் நடவடிக்கையையும் எதிர்த்து தொழிலாளர்கள் நடத்தும் போராட்டம் அப்பகுதி முழுவதும் பரவி—ஊக்கர், ஊட்டி, மோயார், தொட்டபெட்டா ஆகிய பகுதிகளில் உள்ள தொழிலாளர்களும் ஆதரவு வேலைநிறுத்தத்தில் இறங்கினர்.

தொழிலாளர்களது உறுதியான ஒன்றுபட்ட நடவடிக்கையை உணர்ந்த நிர்வாகம், கடைசியில் வேறு வழியின்றி சமரசத்திற்கு இணங்கி வந்தது. சமரசப் பேச்சு வார்த்தையில் தோழர்கள் செல்லமுத்து, நஞ்சுண்டான், பாலன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

பெண்களைத் தவருகப் பேசிய அதிகாரி மன்னிபபுக் கேட்டார். சஸ்பெண்ட்செய்யப்பட்ட 4 தொழிலாளர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக் கொள்ள நிர்வாகம் ஒப்புக் கொண்டது. அதன்பின் தொழிலாளர்கள் அனைவரும் வேலைநிறுத்தத்தை வாபஸ் பெற்று அடுத்த நாள் முதல் வேலைக்குத் திரும்பினுர்கள்.

## இந்துமகா சமுத்திரத்திற்குள் அமெரிக்க கப்பல் படைகள்

சிங்கப்பூர், அக். 25—

இந்துமகா சமுத்திரத்திற்குள் அமெரிக்காவின் போர்க்கப்பல்கள் சிங்கப்பூரிலிருந்து வந்து கொண்டிருக்கின்றன.

விமானம்தாங்கிக்கப்பல் தலைமையில் இவைகள் இச்சமுத்திரத்தில் நடமாடுகின்றன.

1973-ம் ஆண்டு அரபு நாடுகளுக்கும் இஸ்ரேலுக்குமிடையே நடைபெற்ற யுதத்திற்குப் பிறகு இந்துமகா சமுத்திரத்திற்குள் அமெரிக்காவின் கப்பல்படை நடமாடுவது இது எட்டாவது தட்வையாகும.

இந்துமகா சமுத்திரத்திற்குள் கப்பல்படைகளை அனுப்பியும், அச்சமுத்திரத்திலுள்ள டையகோ கார்சியா தீவில் ராணுவத்தளம் அமைத்தும் இந்தியா போன்ற நாடுகளை நிரந்தர மிரட்டலில் வைத்துக் கொள்ள முயற்சிக்கின்றனர் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள். அவர்களைத்தான் இந்தியாவில் தொழில் நடத்த வருமாறு இரு கை நீட்டி வரவேற்கிறது, இந்திய அரசாங்கம். இந்திய-அமெரிக்க கூட்டுக் கமிஷன் கூட்டத்தை நடத்தி அமெரிக்க ஏகாதிபத்தியத்தோடு கல்வி, கலாச்சார ஒப்பந்தங்களைச் செய்து கொண்டுள்ளது. அதன் மூலம் அமெரிக்காவின் அரசியலும்' கலாச்சாரமும் இந்தியாவிற்குள் இடம்பெற வாசல் திறந்து விடப்பட்டுள்ளது.

இந்துமகா சமுத்திரத்தில் அமெரிக்காவின் நடவடிக்கைகள் அதிகரிக்கிறதே என்று கேட்டால், அமெரிக்கர்கள் அவர்கள் கொள்கையில் இருக்கிருர்கள், நாம் நம்முடைய எதிர்ப்புகொள்கைகளை கொண்டுள்ளோம் என்கிருர்சவான். மிரட்டுகிற வகையில் நடமாடும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளை இந்தியாவிற்குள் பலவகைகளில் அனுமதிப்பதுதான் 'எதிர்ப்பு' நடவடிக்கை போலும.

## எகிப்தை கண்டிக்கிறது சோவியத் யூனியன்

மாஸ்கோ, அக். 25—

எகிப்துக்கு சோவியத் யூனியன் செய்த உதவிகளை சிறுமைப்படுத்தவும் இருநாடுகளுக்கிடையேயான கூட்டு ஒத்துழைப்பை தகர்த்தெறியவும் எகிப்துமுயற்சிப்பதாக சோவியத் யூனியன் கண்டித்துள்ளது.

சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் பத்திரிகையான 'பிராவ்தா'வில் எழுதப்பட்டுள்ள கட்டுரையில் மேற்கண்டவாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

எகிப்தில் 148 திட்டங்கள் செய்து முடிக்க சோவியத் யூனியன உதவி செய்துள்ளது. அவற்றிலுள்ள நூறு திட்டங்கள் செயல்பட் ஆரம்பித்துவிட்டன. அதஞல் எகிப்து அரசாங்கத்திற்கு வருமானம் பெருகியுள்ளது என்று அப்பத்திரிக்கை குறிப்பிடுகிறது.

சோவியத்யூனியன்கட்டிக் கொடுத்த திட்டங்கள் எகிப்துக்கும் அங்நாட்டுமக்களின் நலனுக்கும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவைகள் என எகிப்து தலைவர்களே ஒரு தட்வைக்கு பல தட்வை கூறியுள்ளனர் என்பதை நினைவுகூர்ந்து கொள்ளுமாறு எகிப்து தலைவர்களை அப்பத்திரிக்கை கேட்டுள்ளது.

மேலும், 1967-ம் ஆண்டு இஸ்ரேல் நாடானது எகிப்தை தாக்கியபோது சோவியத் யூனியனிடமிருந்துஎகிப்துதேவையான முழு ஆயுத உதவி பெற்றது என்றும 73-ல் மீண்டும் இஸ்ரேல் தாக்கியபோது, சோவியத் யூனியனின் முதல்தரமான ஆயுதங்கள்எகிப்துக்கு வழங்கப்பட்டன என்றும் கூறியுள்ளது அப்பத்திரிகை.

ஜனநாயகபாதுகாப்பு

## பொதுக்கூட்டங்கள்

கோவை, அக். 27—

கோவை நகர் 1வது வார்டில் மார்க்சிஸ்ட் கம்யூ. கட்சி சார்பில் ஜனநாயக பாதுகாப்பு பொதுக்கூட்டம் கடந்த 22ந் தேதி நடந்தது. தோழர் ஈஸ்வரன் தலைமை வகித்தார். மதுரை நன்மாறன், ஜி பி நாராயணசாமி, கே வேணுகோபால், சி மணி ஆகியோர் பேசினர்.

### சாத்தூர் பகுதியில்

சாத்தூர் பகுதியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஜனநாயகப் பாதுகாப்பு பொதுக்கூட்டங்களும், மதுரை தியாகி மணவாளன் குழுவினர் இன்னிசை நிகழ்ச்சிகளும் நடந்தன.

ப இலட்சுமிபுரத்தில் 20ந் தேதி தோழர் ஆர் வி சோலைசாமி தலைமையிலும் 21-ந் தேதி ஒ. மேட்டுப்பட்டியில் தோழர் ஜி எல்லப்பராஜ் தலைமையிலும், 22ந் தேதி சாத்தூர் வடக்கு ரத வீதியில் எஸ் மாரியப்பன் தலைமையிலும் பொதுக்கூட்டங்கள் நடந்தன. இக்கூட்டங்களில் தோழர்கள் ஜி நாராயணசாமி, சி செல்லசாமி ஆகியோர் பேசினர்.

### திருப்பூர்

இங்கு நெசவாளர்காலனியில் கடந்த 16ந் தேதி நடந்தஜனநாயகப் பாதுகாப்பு பொதுக்கூட்டத்துக்கு தோழர் ராஜமாணிக்கம் தலைமைவகித்தார். தோழர்கள் கே எஸ் கருப்பசாமி, என். ஆறுமுகம். ஆர். ரெங்கசாமி ஆகியோர் பேசினர்.

பழைய மார்க்கெட் வீதியில், 22-ந் தேதி நடந்த பொதுக்கூட்டத்துக்கு தோழர் பழனிச்சாமி தலைமைவகித்தார். ஆர், பாலகிருஷ்ணன், ஜி. காளியப்பன் என். ஆறுமுகம். எஸ். குப்புசாமி ஆகியோர் பேசினர்.

### ஊட்டி

இங்குள்ள போஸ் திட்லில் கடந்த 19-ந் தேதியன்று நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர்கள் தஞ்சை கோ. பாரதிமோகன் கோவை ஆர் வெங்கிடு, ப செல்லமுத்து, கோபிநாதன் ஆகியோர் கலந்து கொண்டு பேசினர்.

இக்கூட்டங்களில் அவசர நிலையின் தன்மைகளை விளக்கியும், உழைக்கும் மக்களது கடமைகளை வற்புறுத்தியும் பேசினர்.

போனஸ் அவசரச் சட்டத்திஞல் உழைக்கும் வர்க்கத்துக்கு ஏற்பட்டுள்ள பாதுகாப்பு குறித்து விளக்கிய தோழர்கள் அச்சட்டத்தை வாபஸ் பெறவேண்டிய அவசியத்தை வற்புறுத்தினர்.

## இந்தியாவுக்கு கனடாவின் விசேஷக் கடன்

புதுடெல்லி' அக். 24—

இந்தியாவுக்கு 8கோடியே 90 லட்ச ரூபாய் மதிப்புள்ள உரத்தை விசேஷக் கடன் முறையில் கனடா கொடுக்கிறது. இதற்கான ஒப்பந்தத்தில் இந்தியாவிற்கான கனடாநாட்டு ஹை கமிஷனரும், இந்தியநிதி அமைச்சகத்தின் பொருளாதாரச் செயலாளரும் கையெழுத்திட்டுள்ளனர்.

3 ஆண்டுகளில் இந்தியாவுக்கு கனடா கொடுத்த மூன்ருவது விசேஷக் கடனுகும் இது. இக்கடனை 50 ஆண்டு காலத்தில் எவ்வித வட்டியும் இல்லாமல் திருமபக் கொடுக்கலாம். இக் கடன் ஒப்பந்தப்படி பொட்டாஷ் உரமும் ஏனைய உரங்களையும் கனடாவிடம் இந்தியா வாங்கும்.

## பேங்க் ஊழியர்களுக்கு போனஸோ, இனும் தொகையோ இல்லை

### ரிசர்வ் பேங்க் உத்திரவு

பம்பாய், அக். 25—

பேங்குகளின் ஊழியர்களுக்கு எவ்வித போனசோ அல்லது இனும் தொகையோ கொடுக்கக் கூடாது என்று ரிசர்வ் பேங்கானது ஏனைய பேங்குகளுக்கு கட்டளை அனுப்பியுள்ளது. இது குறித்து மத்திய அரசின் முடிவு வரும்வரை காத்திருக்கவேண்டுமாம்.

கடந்த மாதம் மத்திய அரசாங்கம் பிறப்பித்துள்ள போனஸ் அவசரச் சட்டப்படி, பேங்க் ஊழியர்களுக்கு போனஸ் கிடையாது. இனும் தொகை மட்டும் அரசாங்கம் விரும்பிஞல் கொடுக்கலாம், கொடுக்கவும் மறுக்கலாம் என்பதையொட்டியே ரிசர்வ் பேங்க் இந்த உத்திரவை அனுப்பியுள்ளதாகத் தெரிகிறது.

---

## இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறு

5-ம் அத்தியாயத்தின் தொடர்ச்சி

இந்தியாவில் மொகலாயப் பேரரசர்களது ஆட்சியின் கீழ் குறிப்பிடத்தக்க வகையிலான பெரிய அளவில் முழுமை பெற்றிருந்த ஒரு நில உடைமை உறவு உருவம் பூண்டிருந்தது. நாட்டின் எல்லாப்பகுதிகளிலும் இந்த நில உடைமை உறவு ஒரே முறையில் செயல்படவில்லை என்பது உண்மைதான். ஆனுலும், பல்வேறு வகையிலுள்ள இந்த முறைகள் அனைத்திற்கும் ஒரே மாதிரி பொருந்தக் கூடிய ஒரு பொதுத்தன்மை இருந்தது.

அதாவது, நிர்ணயிக்கப்பட்ட வரிகளை வசூலிப்பதைத் தவிர நிலத்தின் மீது சொத்துரிமையை நிலைநாட்டவோ, உண்மையான நிலம் வைத்திருப்போர்களின் உரிமைகளில் அளவு மீறி கலையிட்வோ ஆட்சியாளர்கள் முயற்சிக்கவில்லை என்பதுதான் நாடு முழுவதும் இருந்த பொதுத்தன்மை. நிலப்பிரபுத்துவ அமைப்பின் கீழ் வளர்ந்து வந்த நில உடைமையாளர்கள் கூட, தங்கள் நிலத்திற்கான குத்தகையை வசூலிப்பதைத் தவிர, நிலம் வைத்திருப்போர்களது அதிகாரங்களிலோ உரிமைகளிலோ தலையிடவே இல்லை. நிலஉடைமையாளர்களுக்கோ ஆட்சியாளர்களுக்கோ உண்மையான நிலச் சொந்தக்காரனை விவசாயி கொடுக்கவேண்டிய வரி அல்லது குத்தகை விகிதங்களை அந்தந்த பிராந்திய நிலமைகளுக்கேற்ப நிர்ணயிப்பதும் வழக்கமாக இருந்தது.

அனேக நூற்றுண்டுகளாக இப்படிப்பட்ட ஒரு சமூக அமைப்பு இருந்து வரக்கூடிய ஒரு நாட்டின் ஆட்சியாளர்களாக தாங்கள் உயர்ந்ததும், ஆங்கிலேய கம்பெனியினர் தங்களது சொந்த நாட்டில் அமுலிலிருக்கும் நில உடைமை அமைப்பை இங்கும் அமுல் படுத்த முயன்ருர்கள். தங்களது நாட்டு வழக்கப்படி வளர்ந்து வரும் எண்ணங்களையும் சட்டவரையறைகளையும் இங்கு ஏற்படுத்த முயன்ருர்கள். இந்தப் பிரச்னையில் ஆங்கிலேயர்களுக்கிடையே இரண்டுவித கருத்துக்கள் ஏற்பட்டன, மன்னர் அல்லது ஆட்சியாளர்தான், நாட்டிலுள்ள எல்லா நிலச்சொத்துக்களுக்கும் உரிமையாளர் என்ற எண்ணத்தில் ஒரு பிரிவினர் செயல்படத் தொடங்கினர்கள். மற்ரெரு பிரிவினர் இதனை ஆதரிக்கவில்லை. இவர்கள், ஆட்சியாளர்களுக்கும் உண்மையான நிலம் வைத்திருப்போருக்கும் இடையே ஒரு நிலஉடைமையாளர் இல்லாமல் முடியாது என்ற கொள்கையில் உறுதியாக—நின்றனர். இந்தக் கருத்துவேறுபாட்டின் விளைவாக, மேற்கண்ட இரண்டு கொள்கைகளுக்கும் பொருந்தக்கூடிய வகையில ஒரு நில உடைமை அமைப்பை இந்தியாவில் அமுல்படுத்துவதற்கான முயற்சிகள் நடந்தன.

இதன் விளைவாக சில இடங்களில் ஜமீன்தாரி முறை, வேறு சில இடங்களில் ரயத்துவாரிமுறை, இன்னும் சில இடங்களில் மகல்வாரிமுறை—இவ்விதமாக மூன்றுவித பிரதான அமைப்புகளும் இவற்றில் ஏராளமான உட்பிரிவுகளும் இந்தியாவில் ஆங்கிலேய ஆட்சியின் கீழ் ஏற்பட்டன.

### கிராமியப் பொருளாதாரத்தை தவிடுபொடியாக்கிய வரிகள்

பல்வேறு விதமாகத் தோன்றிய போதிலும் இந்த மூன்று அமைப்புகளும் ஒன்றுபோல் நிலச்சொந்தக்காரர்களான ஏழை விவசாயிகளை கொள்ளையடித்து மேலும் மேலும் ஏழ்மையில் தள்ளுவதற்கு உதவியாக இருந்தது. ஜமீன்தாரி முறையில், ஒரு குறிப்பிட்ட தொகையை நில உடைமையாளர் அரசுக்கு கொடுத்தால் போதும். அதே வேளையில் நில உடைமையாளரின் விருப்பம் போல் விவசாயிகளிடமிருந்து வரி வசூலிக்கலாம்; இதற்கு அரசாங்கம் அனுமதி வழங்குகிறது. ஏனைய இரண்டு முறைகளில், அரசாங்கம் விவசாயிகளிடமிருந்து நேரடியாகவே படிப்படியாக அதிகரிக்கும் விதத்தில் வரி வசூலித்தது. இந்த இரண்டு வகையான வரிவசூல் முறைகள் மூலம் விவசாயிகள் மீதுள்ள சுமை மேலும் மேலும் அதிகரித்தது.

உதாரணமாக 1810—11-ஆம் வருடத்தில் சென்னை சமஸ்தானத்தில் (ரயத்துவாரி முறை) 10 இலட்சம் பவுன் வரி வசூலிக்கப்பட்டது. இது 1825—26 ஆம் வருடத்தில் செங்குத்தாக உயர்ந்து 40 இலட்சம் பவுனுக உயர்ந்தது. பம்பாய் சமஸ்தானத்தில் 1817-ம் வருடம் 8 இலட்சம் பவுனுக இருந்தவரி அடுத்த வருடமே 11·5 இலட்சம் பவுனுகவும், 1837—38-ம் வருடம் 18.6 இலட்சம்பவுனுகவும்உயர்ந்துவிட்டது.

ஆங்கிலேயருக்கு இந்தியாவில் முதன் முதலாக ஆட்சி அதிகாரம் கிடைத்த பிரதேசம் வங்களாம் அல்லவா?

இங்கு ஜமீன்தாரி முறை ஏற்படுத்தப்பட்டிருந்தது. 1764—65 ஆம் ஆண்டில்மொகலாயப்பேரரசரின் ஏஜெண்டுகள் வங்காளத்தில் வசூலித்த வரி எட்டு இலட்சத்து பதினெட்டாயிரம் பவுனுகும். அடுத்த வருடமே அது பதினுன்கு இலட்சத்து எழுபதாயிரம் பவுனுகவும். 1790—91 ஆம் வருடம் இருபத்திஎட்டு இலட்சத்து அறுபதாயிரம் பவுனுகவும் உயர்ந்தது.

அரசாங்கம் நேரடியாக வசூலித்த வரிகள், குத்தகை என்ற பெயரில் நில உடைமையாளர்கள் மூலம் வசூலித்த பெரும் தொகைகள்—ஆகியஇவைகளிஞல் மட்டுமல்ல. இதற்காக ஏற்படுத்திய சட்டங்களும் சேர்ந்து தான் இந்தியாவின் கிராமியப் பொருளாதார அமைப்பை தவிடு பொடியாக்கி விட்டது.

ஒவ்வொரு பகுதி நிலத்திற்கும், அதன் உரிமையாளர் என்ற வகையில் ஆட்சியாளர்களோ, நில உடைமையாளரோ அல்லது விவசாயியோ இருக்கவேண்டும்—இதுதான், அன்னிய ஆதிக்கத்திலுள்ள நில உரிமைச்சட்டத்தின் அடிப்படையான கொள்கை. இந்தக் கொள்கைவழமைபடி வாழையாக இருந்தஇந்தியஎண்ணங்களுக்கும்மக்களின் உணர்வுக்கும் எதிராகஇருந்தது. ஏனெனில், பழைய இந்திய சமூக அமைப்பில் விவசாயி நில உடைமையாளர், குறுநில மன்னர், ஆகியவர்களுக்கு, அவர்களுக்கென தனித்தனியாக வரையறுக்கப்பட்ட உரிமைகள் இருக்கத்தான் செய்தன. ஆனல்யாருக்கும் அளவுக்கதிகமான உரிமைகள் கிடையாது. இதுதான் பழைய இந்திய கிராமிய அமைப்பின் முக்கியமான அம்சம்.

### அன்னிய மார்க்கெட் குறைந்தது

இந்த அமைப்பை மாற்றி, ஒவ்வொரு துண்டு நிலத்திற்கும் ஒரு உரிமையாளர் இருக்க வேண்டும் 'என்ற ஆங்கிலேய முறை அமுலுக்குவந்தது. இந்தபுதுமுறை அமுலாக்கப்பட்டதும், நிலத்தின் உரிமையாளர் அது ஜமீன்தாரிமுறையாகவோ ஏனைய சட்டப்பூர்வ நிலஉடைமையாகவோ அல்லது நிலமுள்ள விவசாயியானுலும் தன்னுடைய உரிமையை அட்குவைக்கவோ விற்கவோ செய்யலாம் என்ற நிலைஏற்பட்டது. இதுமட்டுமின்றி, அரசாங்கத்திற்கு வரி பாக்கி ஏற்பட்டாலோ. நில உடைமையாளருக்கு குத்தகை பாக்கி போட்டாலோ நிலங்களை ஜப்தி செய்யலாமென்றும் சட்டம் ஏற்பட்டது. இதன் விளைவாக நிலமுள்ள ஏராளமானவிவசாயிகள், நிலஉடைமையாளர்கள் ஆகியவர்கள் ஒரு புதிய பிரிவினரின் (ரொக்கப்பணம் வைத்திருப்பவர்கள்) பிடிக்குள் சிக்கினர்கள். பம்பாய் மாநிலத்தில் வருவாய் சர்வே கமிஷனராக இருந்த கேப்டன் விங்கேட் இதுபற்றி பின்வருமாறு கூறுகிருர்:

"மிகவும் நல்ல முறையிலுள்ள கிராமிய லேவாதேவிக்காரர் களிடமிருந்து கடன் பெற முடியாத அளவுக்கு வறுமையில் வீழ்ந்து விட்ட ஏழைமக்களுக்கு குறுகிய காலத்திற்கு, குறைந்த தொகையைக் கொடுத்து அதிகமான வட்டி வாங்கும் ஈனத்தொழிலில் ஈடுபடும் ஒரு கந்துவட்டிக்காரப் பிரிவினர், உருவாவதற்குத்தான் இந்த முறை வழி கோரியது.

இவ்வாறு, ஆங்கிலேயர்கள் அமுல்படுத்திய நிலச் சீர்திருத்தச் சட்டங்களின் விளைவாக இந்தியாவில் நிலப்பிரபுக்கள் கந்துவட்டிக்காரர்கள் ஆகிய இரண்டு பிரிவினர் புதிதாக உருவாயினர். இந்த இரண்டு பிரிவினரும் சேர்ந்து இந்தியாவிலுள்ள மிகப் பெரும்பான்மையான விவசாயிகளையும், கிராமப்பகுதியிலுள்ள ஏனைய ஏழை மக்களையும் கொள்ளையிட் ஆரம்பித்தனர். இவர்கள் இவ்வாறு மக்களை தங்களது சுரண்டல்மூலம் கொள்ளையிட்டு அதன் மூலம்கிடைத்தபணத்தில் கணிசமானஒரு பங்கைஆங்கிலேயக் கம்பெனியினருக்கு கொடுத்தார்கள். இதற்கொத்தபடி இந்தியாவில் பல நூற்றுண்டுகளாக நிலை பெற்றுவந்த கைத்தொழில்களும், அவற்றை அடிப்படையாகக் கொண்ட அந்நிய நாட்டு வர்த்தகமும் அடிக்கடி தகர்ந்து கொண்டிருந்தன.

உதாரணமாக 1795—96-ஆம் ஆண்டில், இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட ஜவுளி சரக்குகளின் மதிப்பு சுமார் இருபத்தோர் இலட்சத்து இருபத்திரண்டாயிரத்து எண்பத்தொன்பது ரூபாயாக இருந்தது. இந்த ஏற்றுமதி 1829—30 ஆம் ஆண்டில் மிகவும் வீழ்ச்சியடைந்து 6 இலட்சத்து 95 ஆயிரத்து 725ரூபாயாகக் குறைந்து விட்டது. அதே வேளையில், இங்கிலாந்திலிருந்து 1814-ல் இந்தியாவிற்கு 18 லட்சம் பவுன் மதிப்புள்ள சரக்குகள் இறக்குமதி செய்யப்பட்டன 1829-ம் ஆண்டு இந்தியாவின் இறக்குமதி 45 லட்சம பவுனுக உயர்ந்துவிட்டது. இவ்வாறு இந்திய கைத்தொழில்காரர்கள் வேலை செய்து உற்பத்தி செய்கின்ற பொருட்களின் அந்நிய மார்க்கெட் குறைந்தது. அதே வேளையில் இந்தியாவில் அந்நியப் பொருட்களின் மார்க்கெட் அதிகரித்தது. ஆங்கிலேயர்களின் நிலச் சீர்திருத்தச் சட்டங்களின் விளைவாக கிராமப் பகுதிகள் ஏழ்மையில் ஆழ்ந்ததென்ருல், வர்த்தக—தொழில் அரங்குகளில் ஏற்பட்ட வீழ்ச்சி கிராமப்புறங்களையும் நகரங்களையும் ஒன்று போல் நாசம் செய்து விட்டது.

### அன்னியச் சுரண்டலின் அனுபந்தம்

இந்திய மக்களின் இந்த வீழ்ச்சியும் நாசமும்தான் இங்கிலாந்தில் முதலாளித்துவ வளர்ச்சியை துரிதப்படுத்தியது என்று கூறுவது மிகையாகாது. இந்த உண்மையை ஜான் ஸ்ட்ராச்சி, பியூக் ஆடம்ஸ் போன்ற ஆங்கிலேய ஆராய்ச்சியாளர்களே ஒப்புக் கொண்டுள்ளார்கள். பேராசிரியர் தாராசந்த், தன்னுடைய நூலில் பின்வருமாறு கூறுகிருர்:—

"இங்கிலாந்திலும் விவசாயப் புரட்சி, தொழிலாளர்களை நிலத்திலிருந்து விரட்டியடித்தது. வேலையில்லாததிண்டாட்டத்தைபெருக்கியது. இதஞல் மக்கள்பெருமளவில்துன்பதுயரங்களைத் தாங்க வேண்டியதாயிற்று. ஆனல் அதையொட்டி நடந்த தொழில் புரட்சி, வேலையற்றிருந்த தொழிலாளர்களுக்கு புதிதாக உருவான தொழில்களில் வேலையளித்தது. இவ்வாறு தொழிலாளர்களின் வேலையில்லாத் திண்டாட்டத்தின் கால அளவு குறைந்தது. இதற்கு நேர்மாருனநிலைதான் இந்தியாவில் ஏற்பட்டது. இங்கு நடந்த புரட்சி கைத்தொழில்களில் வேலை செய்துபிழைத்தவர்களை வேலையற்றவராக்கியது. அதே வேளையில் நவீன தொழில்கள் வளர்ச்சியடைந்தோ, விவசாயம் விரிவடைந்தோ அந்தத் தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்கவில்லை. நாட்டின் பொருளாதார அபிவிருத்தி, அன்னியச் சுரண்டலின் ஒரு அனுபந்தமாக மாறியது. இந்திய மக்களின் வாழ்க்கைத் துயரங்கள் கணக்கிட முடியாத அளவில் பெரியதாகவும் நீண்டதாகவும் இருந்தன"